அன்பு மலர் 19

# நாடகக் கலை

»»» DRAMA «««

சுவாமி சுத்தானந்த பாரதியார்
எழுதியது.

»» அன்பு நிலயம் ««
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

விலை அணா மூன்று; 15 cts.

அன்புமலர் 19.

சுவாமி சுத்தானந்த பாரதியார்

இயற்றிய

# நாடகக் கலை

## DRAMA






பாட்டும் பரதமும் பண்புள்ள நாடகமும்
நாட்டுக்கு நல்ல பலன்.




»» அன்பு நிலயம், ««
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

1939



விலை { அணா 3
சதம் 15



# பதிப்புரை

கலைமகள் திருவடியில், எமது நிலயத்தின் 19-வது அன்புமலரை வைத்துப் பணிகின்றோம். "நாடகக்கலை" என்னும் இந்நூல், பலதிருத்தங்களுடன் புதுமைபெற்று இரண்டாம் பதிப்பாக வெளிவந்துள்ளது.

இக்குறுஞ்சுவடியில், நாடகக்கலை யிலக்கணம், நடிகர் இலக்கணம், நாடகப்பயிற்சிமுறை, நடிகர் ஒழுக்கம், கலைத்தேர்ச்சிக்குரிய வழிகள், பலநாடுகளிலும் நாடகக்கலை வளர்ச்சி—முதலிய அரிய விஷயங்கள் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன. இந்நூலுக்கு இலக்கியமாக, அடிகள் பல நாடகங்களை இயற்றியுள்ளார். அவற்றை நாங்கள் உரிய காலத்தில் வெளியிட்டு வருகிறோம்.

கலை வளர்க! தமிழ் ஓங்குக! அன்பு பெருகுக!

தமிழர் தலை நிமிர்க! தமிழகம் பொலிக!

அன்பு நிலயத்தார்.

10-5-39.

# அருங்கலை

கலையினால், உல கொற்றுமை காணுவாம்;
கலையினால் கருத்தைவிரி வாக்குவாம்;
கலைமகளின் கவின் பெருங் கோயிலில்,
கைகள் கோத்துக் களிப்புட னாடுவோம்;
விலை யிலாமல் விரைந்திடுங் காலத்தில்
வியன்கலை விளை வேறிடச் செய்குவோம்,
நிலையிலா நதி நேரிய வாழ்க்கையை
நீண்ட காவியம் ஆக்குவோம் நேயரே! 1

இய லழகை யிலக்கியம் ஆக்குவோம்;
இயற்கை யுள்ளத்தில் இன்னிசை காணுவோம்;
இய லுணர்வைச் சிலையில் இலக்குவோம்;
எழுதுவோம் படமாய் இயல் வாழ்வினை;
கயல்விழி, கனிவாய், மலர்க் கைகளால்
கருதும் பாவனை காட்டி நடஞ்செய்வோம்:
செயல்கள் ஆயிரம் செய்வோம், கலையினால்
செகத்தின் சிற்பிக ளாகத் திகழுவோம். 2

தூய வாழ்வைத் துலக்குவோம் மேடையில்;
சோக மோகத் துயரை விலக்குவோம்;
நோய் நுடக்கந் தவிர்த்து வளருவோம்
நுட்ப மான கலைதரு நோன்பினால்.
நேய மன்பு, சமநிலை, யொற்றுமை
நேர்மை நல்குங் கலைநெறி பற்றினால்,
ஆயிரம் வகை யின்ப மடைகுவாம்;
அமுதை யுண்ணச் சலிப்பவர் யாவரே! 3

அழகுத் தெய்வத்தை வாழ்த்தி வணங்குவோம்;
அழகுச் சோலையில் அன்புடன் கூடுவோம்;
அழக முதினை ஆருயிர்க் கூட்டுவோம்;
அழகை வாழ்வென்னும் வீணையில் மீட்டுவோம்;
அழகணியை அனைத்திலும் போற்றுவோம்;
அழகி லாத தசுபமென் றோட்டுவோம்;
அழகி லைய மாக்கியிப் பூவினை
அழகு நாண்மலர் தூவிப் பணிகுவாம். 4

## 1. கலை நுட்பம்

உலகம் அரங்கம்; அதில் ஒவ்வொரு உயிரும் ஒரு வினையுடல் தாங்கி நடிக்கிறது. உலகக் காட்சிகளும் படலம் படலமாக மாறுகின்றன. இக் காட்சிக் கிறைவி இயற்கை, சக்தி. உலகை "சக்தி விலாசம்" என்பர் புலவர். சக்திநாதனான ஆண்டவன், நடராஜனாகவும், அரங்கநாதனாகவும் எங்கும் விளங்குகிறான். உயிர்களைத் திருமேனியாகப் பூண்டு இறைவன் திருவிளையாடுகிறான். அவனுடைய ஆடல் ஒரு நொடி நின்றாலும் எல்லாம் சீர்குலையும். ஒவ்வொருவர் உள்ளத்தும் அவன் நடம் புரிகிறான்; அதை ஞானிகள் உணருவர். ஆதலின் நாடகக்கலை உள்ளத்தினின்று உலகளாவியது. நான்கும் (அறம் பொருள் இன்பம் வீடு), ஒன்பதும் (நவரஸம்) நாடகத் தெய்தும்.

பாரதநாட்டின் நாடகக்கலை, அருட் புலவர்களால், உயர்ந்த அத்யாத்ம நோக்கத்தைக்கொண்டு வகுக்கப்பெற்றது. அது இணையற்றது. பஞ்ச பூதங்கள், தன் மாத்திரைகள், ஞான கர்மேந்திரியங்கள், தசநாடிகள், அந்தக் கரணங்கள் முதலிய நாடக பாத்திரங்களுடன், தூல சூக்ஷ்ம காரண சரீர மேடைகளில், ஜீவக்காதலி பரமாத்மக் காதலனை விரும்பி நடிக்கும் நாடகமே வாழ்வு.

## 2. நாடகப் பிறப்பு

சிதாகாசத்தில், சுஷும்னா நாடியைக் கொண்டு, யோகசக்தியானவள் மீட்டும் ஓங்காரத்தினின்றே நாதக் கலை யுதித்தது. இதயச் சிற்சபையில் விளங்கும் பரமாத்மாவைக் கூடுதற்கு ஜீவாத்மா புரியும் யோகசாதனத்தினின்றே நாடகக்கலை யுதித்தது. ஜீவக்காதலி, தலைவனுடன்

இன்புறக் கூடுமுன், எத்தனை யிடர்கள், மனமயக்கங்கள், வீரியத் தினவுகள், அகங்காரத்தின் அசுர மாயங்கள், இன்ப துன்பம், இசை வசை, தெளிவு தேர்வு ஆகிய தொந்த வினைகள், முக்குணப் போராட்டங்கள் அவனைத் தொடரு கின்றன! எத்தனை மாயத் திரைகள் எழுந்து விழுந்து வழி மறைக்கின்றன! எத்தனை எண்ணச் சுருள்கள் சித் தத்திரையில் ஆடுகின்றன! மனமேடையில் கூத்தாடும் சங்கற்ப விகற்பங்களுக்கு எல்லையில்லை! வாழ்வே வினைக் குல நாடகமா யிருக்கிறது. சுத்த மனம் பிருந்தாவனம் போன்றது. அதில் ஜீவபரலீலை நாள்தோறும் நடக்கிறது. இந்திரன் வேண்ட, பிரமனே அருமறையின் அழகுகளைக் கூட்டி ஒரு நாடக வேதமியற்றி, தேவர்களை மிக்க மகிழ் வித்ததாகக் கதையுண்டு. ஆசையாணவ மாயங்களை விலக்கி, ஜீவாத்மா சுத்தாத்மாவாகி, பரமாத்மாவைக் கலந்து இன் புறும் ஞான நாடகத்தைப் பாருங்கள்!

இந்த உயர்ந்த ஜீவப்ரம்மைக்யத்தை விளக்கி, வாழ்வை உயர்த்தவே மகா யோகிகளான சுகப்ரம்மம், வியாஸா சாரியர், வால்மீகிமுனிவர் முதலியோர், **பாகவத, பாரத, ராமாயணாதி** இதிகாசங்களை அருளி, பாரத நாகரிகத்தை உண்டாக்கினர். **வேதமே** நமது புராதனமான, என்றும் புதிய நாடகம். மனிதனின் தெய்வத்தன்மையைக் கொள்ளைகொண்டு மறைக்கும் அகங்கார, காமக்ரோதாதி களான வாளன், நமுசி முதலிய அரக்கரின் இருட் குகையை, விஞ்ஞானமாகிய இந்திரன், வைராக்கியமான குலிசத்தால் தகர்த்து, ஞானம், அமுதம், இன்பம், வீரிய பலம் ஆகிய பசுக்கள், குதிரைகள், முதலிய கடவுட் செல் வங்களை விடுவிப்பதே வேதவரலாறு. இந்த நாடகத்தில் தெய்வத்தன்மையரான சூரியன், அக்னி, அசுவினிதேவர்,

ஸோமன் ஆகியோர் பாத்திரர்களாவர். நமது பாரத தருமதேவி நாதக்கலையை அணிந்தே நம்முன் விளங்கு கிருள். **செல்வக் கலைமகள்** யாழால் அறிவமுது பொழி கிருள். **நாரதர்** தனது வீணுகானத்தால் பக்திரசத்தை மாந்தர் உள்ளத்திற் பாய்ச்சுகிருர். கண்ணன் தனது **மோகன முரளியால்** ஜீவகோபிகளை வசப்படுத்துகிருன். இராவணன் **ஸாமகானத்தால்** சிவனருள் பெற்ருன். நமது தமிழ்நாட்டுப் பெரியாரான சிவத்தொண்டர்களும் ஆழ்வா ராதிகளும், கடவுட்காதலிற் பொங்கிய இன்னிசை யூற்றி ஞல், கடவுட் காட்சியையும் அருளின்பத்தையும் அடைந் தனர்.

வாழ்வே நாடகமாகத் தொடங்குகிறது. பாவனு சக்தி மாந்தருடன் பிறந்தது. விலங்குகளும், தாவரங் களுங்கூட இசையின்பம் உண்கின்றன. விஷத்தன் மையை மறந்து, நல்ல பாம்பு, குழலிசை கேட்டு ஆடுகிறது. நமது பாரத சமுதாய வாழ்வின் ஒவ்வொரு அணுவும் இசையமுதில் ஊறிப்போயிருக்கிறது. அதன் ஒவ்வொரு திருநாளும், இசையின்பத்துடனே தொடங்கி முடிவெய்தும். இம்மைப் பயனும், மறுமைப்பயனும் இசையின் பயனுகும். இசையின்பத்திஞல் இறையின்ப மெய்தும். பாரதஜாதி பாம லர்ச் சோலையிலேயே உண்டு, உறங்கி, விளையாடி, வீரச் செயல் புரிந்து, இறையின்பத்திற் கலக்கிறது.

## 4 நாட்டியம்

**பண், பரதம், நாடகம்** இம்மூன்றும், தேவர்களிட மிருந்து உற்பத்தியாகி, தெய்வத்தன்மை பொருந்தி, உலகில் மாசற்ற இன்ப வாழ்வைக் காண்பதற்கே நிலவுகின்றன. பிரம்மா, நாரதர், பரதர், யாக்ஞவல்கி முதலியோர், இசை

வளர்த்தனர். சிவனின் ஆனந்த நடனமும், கண்ணனின் ராஸலீலேயும் நாட்டியத்தைத் துலக்கின. நன்னாட்களில் கோலாட்டம், குதித்துப் பாடல் முதலியன சிறந்த நோக்கத்துடன் ஏற்பட்டன. காலத்தால் எப்படிச் சீர்கெடினும் இசை, கூத்து, நடனம் முதலிய கலேகள், நமது கோயில் திருவாராதனங்களில் மிகச் சிறந்த நோக்கத்துடனேயே இணைக்கப்பட்டன. பரதம் என்பது கலேச்சொல். ப= (பாவனே)+ர=(ராகம்) த=(தாளம்.) இசையின் மூன்று உயிர்களான பாவனே, ராகம், தாளம் இவையே "பரத" என்னும் மொழியின் பொருள். பரத நாட்டியம் இம்மூன்றையும் ஜீவனுகக் கொண்டது.

## 5. நாடகப் பயன்

வருந்திக் கற்றலேவிடக் கண்ணுல் பார்த்தும், காதால் கேட்டும் அரிய பயனேப் பெறலாம்.

நல்ல நாடகங்கள் ஒரு சமுதாயத்தை உயர்த்தும்; நாகரிகத்தை முன்னேற்றும்; இரு விகார வுலகைக் கண் முன்னே காட்டும். புலன்களின் வழியே அறிவைப் புகட்டும்; சிறந்த கல்விப்பயனே யளிக்கும். அடிமைத் தனம், காமம், வெகுளி, மயக்கம், சிறுமை, பொருமை, ஆணவம், வஞ்சம், குடி, களவு, சூது ஆகிய தீமைகளின் கொடுமையைக் கண்முன் காட்டும்; வாய்மை, தூய்மை, அன்பு, அருள், அறம், வீரம், தெய்வ பக்தி ஆகிய நல்லியல்புகளே ஊக்கும். உலகின் முக்குணப் போராட்டங்களே மேடைமேல், திரை முன்னே காட்சிப் படலங்களாக விளக்கும். நாடகமென்பது நடிக்கும் வேதம். இறையன்பு, நாட்டன்பு, சமுதாய சீர்திருத்தம், இலக்கியப்

பயிற்சி, காவியம், ஓவியம், பாட்டு, நடனம் ஆகிய கலை வளர்ச்சி, சன்மார்க்க வுணர்ச்சி இவை யெல்லாம் திறமை யுள்ள பாத்திரர் நடிக்கும் நாடகத்தால் உண்டாகும். ஒரு பொதுநல இயக்கத்தைப் பொதுஜனங்களிடையே பரப்பி வெற்றி பெறச் செய்வதற்கு நாடகம் சிறந்த சாதன மாகும்.

## 6. நாடகவகை

காதல், களிப்பு, வீரம், கருணை, நகைப்பு, வியப்பு, சினம், அச்சம், மயக்கம், இரக்கம், விருப்பு, வெறுப்பு, கொலை, பகை, பொறுமை, வசை, இழிப்பு, அவலம், இடர், பேய்மதம், அகந்தை, ஆத்திரம், அமைதி, பொறுமை, ஆர் வம், கொடுமை, செம்மை, தளர்வு, துணிவு, ஈகை, இரக்கம், பக்தி, ஞானம், வைராக்கியம், முதலிய தன்மைகளைக்காட்டி, அறிவும், இன்பமும், விளைவிக்கும் நாடகக் கதைகள் பல வாம். அன்பு விதைத்து, வீரந்துளிர்த்து, அனுபவம் கிளைத்து, அறிவு மலர்ந்து இன்பங் கனிதல் கதைக்கினிது.

அறிவு, ஆற்றல், அன்பு, வீரம் ஒழுக்கம் இவை சிறந்த தலைவன், பெரியாரைத் தலைக்கொண்டு, உலகின் ஏற்றத் தாழ்வுகளுடன் போராடி வெற்றி பெறுவதை ஐந்து முதல் பத்திற்குட்பட்ட அங்கங்களில் காட்டுதல் சிறந்த நாடக மாம். நாடகம் இன்ப நாடகம் (comedy), துன்ப நாட கம் (tragedy) என இருவகைத்து. தலைவன்-தலைவி இன் புற முடிவது இன்ப நாடகமாம்; துன்புற முடிவது துன்ப நாடகமாம். உண்மைக்காதல், வீரம், அன்பு, இவற்றைப் பொருளாகக் கொண்டு தலைவனுக்கு முதன்மை தருவது நாடகம். இசை, கூத்து இவற்றுடன் பல பெண்களைக் கொண்டு தலைவிக்கு முதன்மையளிப்பது **நாடிகை**; இது

நான்கு அங்கங்களைக் கொண்டது. நற்குணமும், கற்பும், அழகும், சீலமும், அடக்கமும், இனிமையும், மென்மையும், தலைவிக்கு இன்றியமையாக் குணங்களாகும். பழைய, புதிய சரித்திரங்களினின்று தக்க தலைவன்-தலைவி இவர்களைத் தேர்ந்தெடுக்கலாம். இதுதவிர, **கற்பனை** ஒருவகை நாடகம்; காலத்திற்கும், அதன் சீர்திருத்தத்திற்கும் ஏற்ற பயனையுண்டாக்கக் கற்பனையாக நாடகங்கள் புனைந்து நடத்தலாம். குடும்பவாழ்வு, சமூக வாழ்வு, உலகியல்பு முதலியவற்றை இக்கற்பனை வாயிலாகக் காட்டலாம். வீரச்செயல்கள், பெரியோர் வரலாறு முதலியவற்றை மிகவுயர்ந்த செய்யுள் நடையில் பாடி நடித்தல், ஒரே அங்கத்தில் நவரசங்களைக் காட்டும் ஒரு சம்பவத்தை நடித்தல், மனிதவியல்பின் நன்மை தீமைகளை மூன்று அங்கங்களிற் காட்டல், தேவாசுர யுத்தங்களை நடித்தல், ஹாஸ்யரஸங்களைச் சிறு கதைகளாலும், வேடிக்கைப் பேச்சுகளாலும் காட்டி, சமய சமுதாய சீர்திருத்தஞ்செய்தல், வாய் பேசாது ஜாடைகளினாலேயே நடத்தும் கதை கேளி, முதலிய எத்தனையோ வகைக் கூத்துகள் உள்ளன. சமய சமுதாய முன்னேற்றம், ஆன்மவுணர்ச்சி, ஆருயிரன்பு, தூயவாழ்வு, உட்புற விடுதலை, ஒற்றுமை, சமரஸம், சன்மார்க்கம் ஆகிய நடை முறைகளையும் ஸாதனங்களையும் நன்கு விளக்கல், முன்னேற்றத்திற்கொவ்வாத வீண் பழக்க வழக்கங்களைக் கண்டித்தல், நகைப்பாலும் உறுத்திச் சொல்லுவதாலும், அல்லன விலக்கி ஆவனதுலக்கல், இனிய தூய பாட்டுகளால் சுத்த சன்மார்க்க தருமத்தை மக்கள் மனத்திற் பதியவைத்தல்—இவையே நமது நாடகக் கொள்கை. அருள், பொருள் அழகு, அறிவு, இன்பம் இவையே நல்ல நாடகங்களின் ஐந்துயிர்களாம். அங்கத்தாலும், இரசபாவனைகளாலும் முறைவகுக்கப்படினும், புலவர் உள்ளெழுச்சிக்கேற்றவாறு எத்தனையோ நுட்ப

வகைகளாக நாடகம் அமைக்கலாம். பெயர்க் கட்டுப்பாடு கள் நமக்கு வேண்டா. அறிவு ஆயிரங்கதிர் பரப்பி எல்லை யற்றகாட்சிகளைத் துலக்குக!

## 7. நவரஸ பாவனைகள்

சிங்காரம் (உவப்பு), வீரம், நகை, சாந்தம் கருணை, குற்சை (இழிவு), அற்புதம், பயம், கோபம், முதலிய நவரசங் களைக் கொண்டது நாடகக்கலை. இனிய குரலும், பாட்டும் அதற்கமைந்த பேச்சும் இணைந்து, நாடகப் புலவன் கை கொட்டியும், கண்மலர்த்தியும், முறுவல் பூத்தும், சிரித்தும், குரலை உயர்த்தியும் **இன்பத்தைக்** காட்டுவான்; பெண் வேடம் புனைவோர் இனிய முறுவல், அழகிய நாணம், கைக் குறிப்புகள், கண்மலர்ச்சி இவற்றால் மெல்லிய குரல் கொண்டு இன்பச்சுவையை விளக்கவேண்டும்.

நகைச்சுவையில் எள்ளி நகைத்தல், அமைதிப் புன்ன கை, வஞ்சச்சிரிப்பு, பெருநகை, இடி நகை, இடர்க்கண் நகு தல், வெறிநகை, செருக்குடன் நகுதல் எனப் பலவகை யுண்டு.

தலையிற் கைவைத்தல், விரிந்த கூந்தல், மயிர் பறித்தல், பெருமூச்சு, அழுகை, அலமரல், காலை அழுத்தி மிதித்தல், கண்ணை மேலே பார்த்தல், நிலைப்பின்மை இவற்றால் **துன்பக் குறி** காட்டலாம்.

வாயையும் கண்ணையும் அகலத் திறத்தல், புருவஞ் சுருக்கல், கையை உயர்த்தல், உடல் நடுங்கல், மார்பு துடித் தல், விரைவாக உயிர்த்தல், மெலிகுரல், படபடப்பு, துடி துடிப்பு முதலிய குறிகளுடன் **அச்சப்** பொருளைச் சுட்டி **அச்சச் சுவை** காட்டலாம்.

கழுத்து விடைத்தல், மூக்கு விரிதல், தலையை வக்க ரித்து ஆட்டல், கையை உதறல், நெருப்பெழ நோக்கிக் கண்ணை யுருட்டல், நெற்றி சுருங்கல், தசைகள் இறுகல், விரல்களை மடக்கிக் குத்துவதுபோல் ஓங்குதல், உடல் பட படத்தல், பல் நெருநெருத்தல், கால் மிதித்தல் முதலிய குறி களால் **கோபங்** காட்டலாம்.

இமைகளைத் தாழ்த்தி நோக்கி உதட்டை விரித்து, 'ஹா! ஐயோ' என்று மூச்சு விட்டு, விழிநீரை அடிக்கடி துடைத்துக்கொண்டு **இரக்கத்தைக்** காட்டலாம்.

கையால் தடைக்குறி காட்டல், விரல்களை உதறல், முகவிகாரம், பல் இறுக்கம், குரலில் கண்டிப்பு, ஆத்திரம், சினம் இவற்றால் **வெறுப்பைக்** காட்டலாம்.

முகவாட்டம், ஒரு கைப்பிடியால் மறுகையில் அடித் தல், துடித்தல, மறதிபோலிருந்து யோசித்தல், மார்தட்டி அகந்தை பேசல், அழுதல், ஆவலாதி, சிறுமை, முறையிடல், வயிற்றெரிச்சல் படுதல், பல்லைக் கடித்தல், கையை நெரித் தல், கண்ணை உருட்டிப் பார்த்தல் இவற்றால் **பொருமை** யைக் காட்டலாம்.

கண், வாய், கைகளை விரித்தல், கையைக்கொட்டி முக வாய்க்கட்டையில் வைத்தல், உடல் ஒரு நிலையில் தம்பித் திருத்தல், ஆச்சரியமாகிப் பேச்சடைத்தல் முதலியவற்றால் **வியப்பைக்** காட்டலாம்.

நெற்றி விரிதல், புருவம் வளைதல், உதட்டை மலர்த்தல், இன்பப் புன்னகை, ஆவலுடன் நோக்குதல், கடைக்கண், கண்ணைப் பாதிவிழித்தல், மெல்லிய முகமன், வசிகரமான இனியகுரல், பாட்டு, பரவசம், உடலை வளைத்தல், முதலிய ஜாடைகளால் **காதலைக்** காட்டலாம். உள்ளவுணர்ச்சி

யிருந்தால் நடிப்பு இயல்பாகவே வரும். நடிப்பு இயல்பாக அமைவது நலம். இரசங்கள் ஒன்பதாக வகுக்கப்படினும், அவற்றுள் எத்தனையோ கிளைக ளுள்ளன. முக்குணப் போராட்டமான வாழ்வில், ஆயிரக்கணக்கான மாற்றங்களும் விகாரங்களும் உள்ளன. அவற்றின் இயல்பு, காட்சி, இடம், காலம், செயலுக்கேற்ப உணர்வும், மொழியும், நடிப்பும் அமைதல் வேண்டும். உரையும், உறுப்பும் உட்பொருளை விளக்குதல் நடிப்பிற் கழகாம்.

## 8. இயல்பாய் நடித்தல்

நடிப்பில் மிதமிஞ்சிப்போனால் இயற்கையழகு போய் விடும். திருடன் திருடவந்த இடத்தில் ஆரவாரஞ்செய்து கூத்தாடுவது, கதையினிடேய விகடனைத் தனியாக, சம்பந்தமின்றி, பூஜையில் கரடி ஓட்டுவதுபோலப் பேசவிடுவது, ஆபாசமான நடிப்புகளையும், கொச்சைப் பாட்டுகளையும், புல்லியல் மொழிகளையும் இடர்க்கட்டையாகப் புகுத்திக் காதலின் பெருமையைச் சிதைப்பது, கற்புத் தெய்வத்தின் கௌரவத்தைக் குறைக்கும் இழிமொழிகள், நடிகரின் சொந்த மனத்தாங்கலை மேடைமீது காட்டுவது, தான் கொண்ட வேடத்திற் கொவ்வாத பேச்சு, நடிப்பு, ஒழுக்கத் தவறு, இழுக்க நடை, தீயபழக்கங்கள் இவற்றால் நாடகக் கலை சிறுமையுறும். கலையும், கவினும், பண்பும், பயனும் பொருந்திச் சுவைமிக்க நாடகங்களைத் தேர்ந்தெடுத்துப் பயிலவேண்டும்.

## 9. நகைச்சுவை

ஆத்மஞானம், ஆத்மவீரம், தூய வாழ்வு, கற்பு, வாய்மை, தியாகம், அன்பு,அருள், நேர்மை அருள், முறையான

காதலின்பம் இவற்றைப்பார்ப்போர்மனத்திற் பதியவைத்து, இவற்றிற்கு எதிர்மறையான தன்மைகளை யொழிக்கச் செய்வதே நடிப்பின் கருத்து. சிருங்கார ரசத்தை வெங்காமச் சுரசமாக்கி, நடைமுறையைக் கெடுத்து, புனிதமான கலையை மாசுறுத்தாமலிருக்கவேண்டும். பேரின்பக் காதல் மிக்க, மஹான்களின் சரித்திரங்களை நடித்தால் சமுதாயம் பரிசுத்த மடையும். சன்மார்க்கம், நாடகம் பார்ப்போர் மனத்திற் பதியவேண்டும். நமது சமூக வாழ்வில் எண்ணிறந்த நகைச்சுவைகளிருப்பதால், நமது சீர்திருத்த நாடகங்களில் தனியாக விதூஷகன் வேண்டியதில்லை. இப்போது நாகரிக நாடகங்களில் தனியாக விதூஷகனுக்கு இடமில்லை. முற்கால நீதிமன்னர், தங்கள் அரசியற் சுமையைச் சிறிது மறப்பதற்கும், மனக்கவலைகளை மாற்றுவதற்கும் சிற்றின்பத் தூதுகளுக்கும் விகடனை வைத்துக்கொண்டிருந்தனர். இக்காலத்தில் மன்னர் அப்படி விகடனைத் தனியாக வைத்துக்கொள்வதில்லை. நகைச்சுவையைக் கதையுடன் இணைப்பதே இயல்பாகும். தனியாக இடைக் காட்சிகளாக வேண்டுமெனின், அறிவுபுகட்டும் பெருந்தன்மையான நகைச்சுவை மிக்க கதையும், பாட்டும், பேச்சும் வரலாம். ஆனால் இவற்றால் கதையின் தொடர்பும், காட்சியின் கனிவும் கெடா திருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

## 10. பேச்சினிமை

நாடகப்பேச்சு சுருக்கமாகவும், உருக்கமாகவும் இருக்க வேண்டும். பேச்சில் அமைதி, அழுத்தம், திருத்தம், உணர்வு, நிதானம், இனிமை இவை வேண்டும். சினப்புயலையும், ஆசைத்தீயையும், நாசுக்காகக் காட்டலாம். காட்டுக்கும் மேட்டுக்கும், காதடைக்கச் சத்தமிடவேண்டா. சந்தைக்

கடையில் ஏலங்கூறுவோன்போலத் தொண்டை கிழிய வேண்டாம். அழுத்தி, உறுத்தி, அளவுடன் உரத்திப் பேசுக. வார்த்தையை மழுப்பக் கூடாது. மூக்கால் முனங்கக்கூடாது; கிணீரென்று தரையிலுள்ளவர்களுக்கும் கேட்கும்படி தெளிவாக பேசவேண்டும். பேச்சும், நடிப்பும் ஒத்திருக்கவேண்டும். காற்றைக் கையால் ரம்ப மறுத்தல், ஆடிக்காற்று அலைக்கும் சவுக்குமரம்போல உடலை இங்குமங்கும் ஆட்டுதல், பாடும்போது கையால் லாடுபிடித்தல், இடுப்பைச் செக்காட்டல், தும்பல் வராது முக்குவோன் போல முகத்தைச் சுளித்தல், கணவாய் மாதிரி வாயைத் திறத்தல் இன்றி, வண்டுண்ணும் மலர் போல வைத்துக் கொள்ள வேண்டும். எல்லாம் இயற்கையோ டிணைந்திருக்க வேண்டும். நகைத்தல், பகைத்தல், நாணல், சினத்தல், வெறுத்தல், வெறித்தல், புலத்தல், உவத்தல் எல்லாம் இயலழகின் திருவடிவாயிருத்தல் வேண்டும். அன்னிய மொழியினரின் வேடம் புனைவோர் பேச்சில், "நம்பல்கி செர்ப்பு வாரான்! (எனக்குச் சிரிப்பு வருகிறது,) நான் சொல்றுன் நீ கேக்றுன்" (நான் சொல்வதை நீ கேட்கவேண்டும்) போன்ற விகாரங்களும், வலைஞன் தோட்டக்காரன், சேவகர் வேடம் புனைவோர் "என்னுண்ட்ரே ரோசனை"? (என்ன யோசனை சொல்) என்று மிகவும் கொச்சையாகப் பேசுவதும் தமிழின் பெருமையைக் கெடுப்பதாகும். அதனுல் பண்படாத சிலர் சிரிக்கலாம். மொழிகளை இயல்பாகப் பேசி அந்தந்த நடிப்புகளையும் இயல்பாக்க முடியும். தோட்டி முதல் தொண்டமான்வரையில் எல்லாரும் கல்வி கேள்விகளிற் சிறந்து, இளந் தமிழ்க் குயில்களாக இத் தென்மொழிச் சோலையில் உலாவவேண்டு. மென்பதே எமது கருத்து. பணியாளர்களில் நன்றுகப் படித்தோரும் உள்ளனர். அவர்கள் கொச்சை மொழி பேசவேண்டுமென்

பதில்லை. ஜாதி விரோதம், மதவிரோதம் மனவருத்தம் இவற்றை மூட்டும்படியான வசை, குத்தல், கிண்டல், இடிப் புரை முதலியன நாடகமேடையில் வேண்டா. ஒற்றுமை, சமரஸம், நட்பு, நேயம், நல்லறிவு—இவை நமது கொள்கை. உதவாப் பழக்க வழக்கத்தைப் பாட்டாலும், காட்சிகளி டையே நயமான பேச்சாலும் மாந்தர்க்கு உணர்த்தி, அதை ஒழிக்கும்படி தூண்டவேண்டும். முதன்மையாக, இன்ன விதமாக நல்வாழ்வு வாழவேண்டுமென்றே காண்போர் அறியும்படி நடிக்க வேண்டும். காலிப் பேச்சுகளையும், கொச்சைப் பாட்டுகளையும், பெருந்தன்மையான நடிகர் விலக்கவேண்டும். சபையில் பகிரங்கமாகக் காதலர் ஆலிங் கனம் செய்வது பாங்கல்ல. முதல்தரமான காதல் நாட கம் சகுந்தலம். அதில் அச்சம், நாணம், மடமை, பயிர்ப்பு, பெருந்தன்மை, மென்மை இவற்றுடன் தலைவி அடக்கமாக விளங்குகிறாள்.

## 11. நடிப்பவர் தன்மை.

நல்லதேகக்கட்டு, உற்சாகம், கம்பீரமான உருவம், வசீகரத்தன்மை, புன்னகை, மணிக்குரல், நடிப்பிற்கேற்ற படிப்பு, பொருளறிவு, ஞாபகசக்தி, குறிப்பறிதல், சமயோ சிதபுத்தி, தடையற்ற தெள்ளுரை, இடையே பேச்சுமறந்து விழியாமை, எடுத்துக்கொடுப்போனை (Prompter) உடனே கவனித்தல், சபையில் விழிக்காமல் யுக்தியாகக் காலத்தை நிரப்பல், சிந்தனைசக்தி, வேஷத்தை இலக்கணப்படி பூணல், சபையை மகிழ்வித்தல், சபைக் கூச்சமின்மை, தூய வொழுக்கம், கள்-சுருட்டு-புகையிலை - கஞ்சா - விபசாரம்- நாஸ்திகப்-பிறமத நிந்தை-இவற்றை அறவே யொழித்தல், நாடகமாடுவதற்கு இரண்டு நாளைக்கு முன்பும் பின்பும் சிற்றின்ப நினைப்பின்மை, கூடுமானவரையில் ப்ரம்ம

சரியம் காத்தல், அடிக்கடி தனிமையில் நடித்துப் பார்த்தல், நல்லோர் சேர்க்கை, பிறமாதரைத் தாயெனக் கருதல், சுசிருசியான வுணவு, விரதம், ஜபம், தியானம், மனோ வாக்கு காயசுத்தம், இடைவிடாத கலைவளர்ச்சி, பெருந் தன்மை, செருக்கின்மை, போட்டி பொறாமையின்மை, நாடகக் கலையை ஒரு யோக சாதனமாகக் கருதல் முதலி யவை உயர்ந்த நடிகர்க்குரிய தன்மைகளாம். தனித்துப் பேசல் (Soliloquy), புறத்தே பேசல் (Side speech), உரத்துப்பேசல், அதட்டிப் பேசல், நகைத்துப் பேசல், நாணிப்பேசல், இனிதுபேசல், இடித்துப் பேசல், அணைத் துப் பேசல், மனங்கவரப் பேசல், வெறுத்துப் பேசல், சினந்து பேசல், புனைந்து பேசல், இணங்கிப்பேசல், எதிர்த் துப் பேசல், களித்துப் பேசல், ஒளித்துப் பேசல், மழுப்பிப் பேசல், முதலிய வற்றை இடத்திற்கேற்றபடி முகக்குறிப்பு, கைக்குறிப்பு கண் குறிப்பு, நடைக் குறிப்புகளுடன் அள வாகப் பேசவேண்டும். நடிப்பில்லாப்பேச்சு மினுக்கில்லா வைரம் போன்றது. பேச்சும் நடிப்பும் நாடகக்கலையின் உயிரிகள் (lungs) ; பாட்டு குரல்வளைபோலாம்.

தலைவன், தலைவி அவர் துணையாக நின்று காட்சி நிகழ்த்துவோர் இவர் நடிகராவர். குண நல மாண்பும், சீரிய கொள்கையும், அறநெறி வாழ்வும், அருங்கலைத் திற னும், இனியதன்மையும் கொண்ட தீரன், வீரன், அறிஞன், அருளாளன், ஜயசீலன் உத்தமத் தலைவனுவன். இராமன், கண்ணன், விஜயன், சிவாஜி, அப்பர், முதலியோர் தலை வர்க்கு உதாரணம். நண்பன், அமைச்சன், ஆசான், முனிவன், தூதன், காவலன், ஏவல்புரிவோர், முதலியோர் தலைவன் துணைவர் ஆவர். அழகும், வனப்பும், அன்பும், மென்மையும், இனிமையும், கனிவும், இன்பமும், செழுமை

யும், கலங்கறு கற்பும், கணவன்பிரிவை ஆற்ருக் காதலும், அச்சம்-நாணம்-மடமை-பயிர்ப்பும், மின்றவழ் முறுவலும் மயில்போற் சாயலும், குயில்போற் குரலும், மீன் போல் விழியும், தேன்மலர் முகமும், அமைதியும் அடக்கமும் பொறுமையும், பொருந்திக் கலைத்திறம் வாய்ந்தவள் தலைவி யாவாள். உத்தமத் தலைவருடன், தோழிமார், சேடியர், பரத்தையர், சக்களத்தியர் அரக்கத்தன்மையும், அட்ட காசமும், காமவெறியும் கடைக் குணங்களும் கொண்டோர் இவர் கூத்திடை வந்து காட்சியை வளர்ப்பர். சீதை, திரௌபதை, தமயந்தி, கண்ணகி, பத்மாவதி, சம்யுக்தை, அல்லி, போன்ரூர் சிறந்த தலைவியராவர்,

## 12 பாட்டு

விருத்தங்கள் பொருள் எளிதாக விளங்கினல் அடிக்கடி பாடலாம். இராகதாளங்களுடன் கூடிய பாட்டுகள் மிகச் சுருக்கமா யிருக்கவேண்டும். காட்சிக்கு இரண்டு போதும். பேச்சே அதிகமா யிருக்கவேண்டும். நல்லுரைகளாலேதான் நாடகப் பயன் விளங்கும். தெலுங்கு நாடகங்களில் பத்தியங்களே அதிகம். அதுமாதிரியே தமிழ் நாடகங்களில் விருத்தங்கள் இருப்பது நலம். மிகவும் உருக்கமான காட்சிகளில், நல்ல பொருளுள்ள சிறுசிறு துக்கடாப் பாட்டுகள் பாடலாம். மேடையில் பாடும்போது கைத்தாளம் போட வேண்டா. சொற்களை அழுத்தந்திருத்தமாக உரைக்க வேண்டும். தலைவி யிரங்கல், தலைவன் மயங்கல், அழகை வர்ணித்தல், குணத்தை வர்ணித்தல், ஓகை, வீரம், உருக்கம், உவப்பு, நன்னெறி, அருள் வேண்டல் முதலியவற்றிற்கு விருத்தம் பொருத்மாம். கீர்த்தனங்களும், பதங்களும் பாடும்போது அவற்றின் பொருளை அபிநயத்தால் விளக்கவேண்டும்.

### கூத்து

கூத்திலக்கணம் மிகவும் நுட்பவிரிவுடைத்து. இனிய பாடலும், சின்ன மேளமும், அபிநயமும் அமைந்து கருத்தைக் கையாலும், காலாலும், கண்ணாலும், முறுவலாலும் காட்டி யாடுதல் பரத நாட்டியமாம். 8 அல்லது 10 பேர் கை கோத்தாடல் குரவைக்கூத்து. இசை வசைப்பாட்டுகளோடு நகைச்சுவை ததும்ப ஆடுதல் நகைக்கூத்து. அன்பின் ஆர்வத்தால் ஆடல் வரிக்கூத்து. ஊடல், கூடல், மகிழ்ச்சி, காட்சி, முதலியவற்றைக் காட்டப் பல வரிக்கூத்துக்கள் உள்ளன. கூத்தென்பது முறமையாக மனக் கிளர்ச்சியைக் காட்டுதற்கே பயனாகும். நமது நாடகங்களில் கடவுளின்பம், காதலின்பம், கலையின்பம், வெற்றியின்பம், வீரக் கிளர்ச்சி இவற்றைக் காட்டவே தக்க இடத்தில், தக்க முறையில் பாட்டும் தாளமும், அபிநய லக்ஷணங்களும் பொருந்திய கூத்து நிகழும். ஒரு இன்பக் கிளர்ச்சியெழுங்கால், நம்மை யறியாது கால்கள் நடமாடுகின்றன. அதுபோல இயல்பாகக் கூத்து நடைபெற வேண்டும். கூத்திலக்கணத்தின் விரிவு எமது **சிலம்புச்செல்வத்திற்** காண்க.

## 13. பயிற்சி முறை.

நடிகர் தமது பேச்சைப் பாடம்செய்து, இயல்பாக்கிக் கொள்ள வேண்டும். முதலில் ஒவ்வொருவருக்கும் நாடக நூலைத் தருக. அவரவர்க்கிசைந்த வேடங் குறிக்கவும். ஒவ்வொருவரும் நூலை முதலில் தனியாக முழுதும் வாசிக்கட்டும். பிறகு ஒரு நன்னாளில், நடிகர் அனைவரும் கூடி, அவரவர் பங்கை முறைப்படி வாசிக்கட்டும். நாடகாசிரியர் அவ்வப்போது அவரைத் திருத்தட்டும். அதன்பின் மூன்று

நாளைக் கொருமுறை புத்தகம் பார்த்தே நடிகர் நடிக்கலாம். இப்படி மூன்று முறை நடித்த பின்பு, புத்தகத்தை எதிரே வைத்துக் கொண்டு, இடையிடையே அதைப்பார்த்து நடிக்கலாம். இப்படி மூன்றுமுறை யானதும், புத்தகமின்றியே, தட்டினபோது ஆசிரியர் எடுத்துக் கொடுக்க நடிக்கலாம். இப்படி மூன்றுமுறை நடித்தபின் புத்தகமின்றியே நடிக்கலாம். முன் பின் னறிந்து, தன்னுடன் நடிப்பவன் பேச்சறிந்து நடிக்கவேண்டும். பாட்டுகளை முறையாகப் பயிலவேண்டும். பழகும்போதும், பின் பாட்டுக்காரர் பக்கத்திலேயே இருந்து பாடவேண்டும். அதன் பிறகு ஒரு நாள், சில நண்பர் முன்பு, வேடமின்றி நடித்துப் பழகுக. நடிக்கையில் சபையோருக்குப் புறங் காட்டற்க. இறுதியாகப் பேசிச் செல்லும்போது, மேடையின் ஓரத்திற்குச் செல்லுக. நடுவேயிருந்து பேச்சை முடித்துச் சும்மா செல்லுதல் விகாரமாயிருக்கும். நடிகர் இயல்பாக அழகு பெற்றிருந்தால், அரிதாரப்பட்டை வேண்டா. அனுவசியமான பூச்சுவேண்டாம். அது முகத்தை விரைவில் கெடுக்கும். காட்சிக்கேற்ற உடையணிக. அவசியமான திரைகள் போதும். அதற்குப் பெருஞ் செலவுகள் வேண்டா. வேடமும் திரையும் இன்றிக்கூட நயமான உரையும் நடிப்புங்கொண்டு காட்சிகளை இயல்பாகக் காட்டலாம். காட்டும் திறைகளும் காட்சி ஜோடிப்பும் இயல்பா யிருக்கவேண்டும்.

இன்பம், துன்பம், அமைதி, ஆத்திரம் முதலியவற்றிற் கேற்றபடி குரலை மாற்றிப் பொருந்த நடித்தால் அதுவே இனிமை பயக்கும். ஆங்கில நாடகங்கள் அவ்வாறே இனிது நடைபெறுகின்றன. நடிகர் நன்றாகப் பழகியே சபைமுன் வரவேண்டும். இங்கிலாந்து, பிரான்சு முதலிய

தேசங்களில், ஒரு நாடகத்தைப் பல முறை நன்கு நடித்த் பிறகே அரங்கேற்றுகின்றனர். மேனாட்டு நடிகர் நாடகாசிரியரை நன்குமதித்து, அவரிடம் சிரமப்பட்டுப் பாடங் கற்றுக்கொள்ளுகின்றனர். திரைகளைவிட நடிப்பும் பேச்சுமே அங்கு மதிக்கப்படுகின்றன; ஆனால் அவசியமான காட்சி ஜோடிப்புகளுக்குக் குறைவிருக்கக்கூடாது. கை தேர்ந்த நன்னடையாளரையே மேடையேற்ற வேண்டும்.

## 14. மேடையும், பெண்களும்

பெண்வேஷத்திற்குப் பெண்கள் அமைவது சிறப்பே. ஆனால் ஒழுக்கந்தவறாது பார்த்துக்கொள்ள வேண்டும். நல்லறிஞரான சதிபதிகள் நாடகத்திலும் சதிபதிகளாக நடிப்பதானால் நன்கு. ஒழுக்கம் உயிரினும் நன்று. நமது புதுயுக நாடகப் புலவர் நடனயோகிகளாவர். அவர்கள் பரிசுத்தவான்கள்; நாடகத் தொண்டை ஒரு பொதுநலங் கருதி மேற்கொண்டவர்கள். அத்தகைய உயர் கருத்தும், தூய நடையும், அமைந்தவர்களை மேடையில் ஏற்கலாம். அவரவர் மனச்சாட்சியைத் தொட்டுப்பார்த்துத் துணிதல் நலம். நடை முறையற்றவர்களைச் சேர்ப்பது நாடகக்கலைமகளின் கற்பைக் கெடுப்பதாகும். அறத்தின் பெருமையைக் காப்போம். பெண்கள் தனித்துத் தாமே சேர்ந்து உற்சாகத்திற்காக நல்ல கதைகளை நடிக்கலாம். பெண்ணின் பெருமையை நன்குமதித்தல் நமது கடமையாகும். நடிகர் ஒழுங்கான மனைவாழ்வு வாழ்வோராயின் நலமே. அவர்கள் ஆறுமாதம் சுற்றுப் பிரயாணத்திலும், ஆறுமாதம் வீட்டிலும் தங்கலாம். மாரிகாலத்தில் நடிகர் தங்கள் ஊரிலேயே தங்கி, நாடகங்களைப் பயின்று கொண்டு, காலநிலை ஏற்றதாயிருக்கும்போது வெளியூர்களுக்குச் செல்ல வேண்

டும். சுற்றுப் பிரயாணத்தி லிருக்கையில், தூயபிரமசரியம் காக்க வேண்டும். கட்டற்ற காமமும், கள்ளும், கலையைக் கெடுக்கும், உடலைக் குலைக்கும், உயிரைத் தேய்க்கும்.

## 15. நடிகர் ஒழுக்கம்

நடிகர் உடல் நலத்தைப் போற்றவேண்டும்; மனதை நேர்வழியிற் செலுத்தவேண்டும்; தினம் 6-மணி நேரம் உறக்கம், 2-மணி நேரம் தேகப் பயிற்சிக்காக நடத்தல், 2-மணி நேரம் தியான வழிபாடுகள், 2-மணி நேரம் குளித்தல், ஆடை துவைத்தல், உண்ணல், முதலியவற்றிற் செலவிட வேண்டும்; காலை 10 மணிக்கும், மாலை $6\frac{1}{2}$-மணிக்கும் சுசிருசியாகச் சாப்பிடவேண்டும். மற்ற நேரம் பசித்தால் பழம், இளநீர், பால் முதலியவற்றை உண்ணலாம். 4-மணி நேரம், (இரவு $7\frac{1}{2}$-மணி முதல் $11\frac{1}{2}$-மணி வரையில்), நாடகம் நடித்தாற் போதும். தினம் 3-மணி நேரம் நாடகப் பயிற்சி செய்து, மீதி நேரத்தை அமைதியாகக் கழிக்கவேண்டும். வீண் பேச்சு, வீண் செயல், தீய பழக்கங்கள், ஊர் வம்புகள் இவை கூடா. நாடகச் சகோதரர்கள் உணவைத் தாமே சமைத்துண்பது நலம். புளி மிளகாய்க்குப் பதில் எலுமிச்சம்பழமும் மிளகும் சேர்த்துக்கொள்ளலாம். காய்கறிகள், தேங்காய், பால், தயிர், நெய், கைக்குத்தல் அரிசி, பாசிப்பருப்பு இவை நல்லுணவுப்பொருள்கள். ஆகார சுத்தம் அவசியமாகும். மலச்சிக்கல், தலைவலி, இந்திரிய ஸ்கலிதம், வயிற்றுவலி, அஜீரணம் முதலிய நோய்கள் ஆகார சுத்தமும், சித்தசுத்தமும் இல்லாததால் உண்டாவன. ஒழுக்கம் விழுப்பந்தரும். பரிசுத்தவான்கள் நாடகமேடையேறினால், கலை எழில் பெறும்; குறித்த பயனைத் தரும். மேடையிலும், தனி வாழ்விலும் நாம் சிறந்த உதாரணங் காட்டவேண்டும். நம்மைப் பார்த்து நாடகக் கலையின்

புனிதத் தன்மையை உலகம் உணரவேண்டும். அதன் வசைகளெல்லாம் ஒழியவேண்டும். நாடகமேடை ஆனந்த நடனசிற்சபையாகப் பொலிந்து,பூதவுடல் போர்த்த வுயிர்களுக்கு ஆன்ம உணர்வு தரவேண்டும்.

## 16. காட்சிப் பொருள்

இந்த உடல் ஜீவாத்ம மாளிகை; புலன்கள் கதவுகள். அதன் வழியே வரும் இன்பங்களை நுகருவோன் ஜீவாத்மா. புலன்கள் பார்த்துப் பார்த்துப் பழுது நீக்கி நல்லதைக் கொண்டு, ஜீவாத்மனுக்குத் தூய வாழ்வை நிவேதிப்பதே காட்சியின் உட்பொருள். கண் எங்கும் கடவுளைக் காண்க! காது அருளுரை பருகுக! உள்ளம், கடவுளை யுணர்க! வாய் கடவுளை வழுத்துக! மூக்கு தெய்வமணத்தை முகருக! மனம் அகந்தை யொழிந்து கடவுட் காட்சி காண்க! இதுவே இன்பம்; இவ்வின்பமே நாடகக்கலையின் ஆழ்ந்த பயனும். வாழ்வைக் கடவுளின்ப வூற்றாக்குவதே கலையின் கருப்பொருள். கலைகள் தேடுவது அழகை. அருளழகே அழகு; அருளுக்கிறைவன் ஆண்டவன். இறைவன் சிந்தனையே கவிதை; அவன் படைப்பே சிற்பம்; அதன் அழகே சித்திரம்; படைப்பு அணிகளின் வாழ்வே நாடகம். இந்த நாடகத் தலைவன் இறைவன்; தலைவி; சக்தி; மாந்தரெல்லாம் அவர் திருவிளையாட்டிற்கே ஆட்களாவர். நாடகக்கலையை நயமுற வளர்த்தால், நாட்டில் அறிவும், அழகும், ஆண்மையும், அன்பும், அருளும், புலமையும் பொலியும்.

உலகமே ஆடரங்கம், நடனசபை; இயற்கையே எல்லையற்ற சித்திரக் காட்சி; இரவியும், மதியும், விண்மீன்களும், விளக்கு அணிகள்; பருவக்காலங்கள் அழகின் ஊர்வலம். வினையுடல் பூண்டார் அனைவரும் மாயசக்தியால்

இயங்கும் நாடக பாத்திரரேயாவர். சாத்வீக ராஜஸ தாமஸ குணங்கள் நாடகக் கதைகளைப் பெருக்குகின்றன. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்களைக் கருவியாகக் கொண்டு, இயற்கையன்னை உலகநாடகத்தை நடத்துகிறாள். இந்நாடகத்தைச் சாட்சி சேதனனாயிருந்து தாங்குவோன் பரமன். எல்லா நாடகமும் அவனில் முடியும். பரமனைப் பணிவோம். அதுவே கலையின் பயன்.

## 17. கிரேக்க நாடகம்

நாடகக்கலை, புனிதமான நோக்கத்துடன் எழுந்து, உலக நாகரிகத்தை வளர்த்திருக்கிறது. பல நாடுகளில் நாடகக்கலை வளர்ச்சிபெற்றோங்கியதை இங்கே சுருக்கமாகச் சொல்வாம். தூய முனிவர்கள் ஆக்கிய இராமாயண பாரத பாகவதக் கதைகள் எண்ணிறந்த நாடகங்களை யுண்டாக்கி பாரத நாகரிகத்தை வளர்த்தன. கிரேக்க நாட்டில் மஹாகவி **ஹோமரின்** ஒதஸ்ஸியன், இலியாது (Odyssey, Illiad) இரண்டும் 580 கி. மு. க்குப் பிறகு நாடகக் கலைக்கு ஊற்றாகி, கிரேக்க நாகரிகத்தை வளர்த்தன. என், ஐரோப்பியக் கலையையே அவை வளர்த்தன! தேவரும், தீர்க்கதரிசிகளும் அங்கு வணங்கப்பெற்றனர். கிரேக்கர் அழகையும், ஆற்றலையும் வணங்குவோர். நாடகம், கவிதை, சொல்வன்மை, பாட்டு, சிற்பம், ஓவியம், தோட்டம் வளர்த்தல், அழகிய கட்டிடங்கள் அமைத்தல், கட்டுங் கனமுமாக உடலை உறுதிசெய்தல் முதலிய அழகுக்கலைகளை கிரேக்கர் உயிரெனப் போற்றினர். அக்காலத்தில் கீர்த்தனங்கள் பாடி அருங்கலைத் தொண்டு புரிந்த **பிந்தர்** (Pindar) என்னும் கவியை கிரேக்கர் போற்றி வணங்கினர். நம் நாட்டில் ராம பஜனை நடப்பதுபோல, வாத்தியங்களுடன் அவர்

களும் பாடியாடிப் பரவசமாயினர்; கூட்டங்கூடி, தெய்வீக வீரர் சரித்திரங்களைப் பாடியாடி நடித்தனர். ஒதீபன் (Oedipus) என்னும் சோகரஸ நாடகம் எழுதிய **ஸொஃபோக்லிஸ்** (Sophocles 495-405 கி. மு.), அல்ஸெஸ்டிஸ், இப்போலீத், இஃபிஜெனி முதலிய பதினேழு நாடகங்கள் எழுதிய **யூரிபிடிஸ்*** (Euripides 480-406 கி. மு.) இவ்விருவரும் நாடகக்கலையை நன்கு வளர்த்தனர். **அலெக்ஜாந்தர்,** தனது வீரச்செயல்களை உடனுக்குடன் நாடகமாக நடிக்கச்செய்து, பல புலவர்களை ஆதரித்தான். **பெரிக்லிஸ்** (Pericles) என்பவர் காலத்தில், அரிய நாடகப் புலவர் நாட்டை அலங்கரித்தனர். புலவர் **அரிஸ்டோஃபேன்** (Aristophene காலக்குறைகளைத் தாக்கி நாடகங்களைப் புனைந்தார். **எபிக்யூரஸ்** (Epicurus) என்னும் சுகபோகியின் நண்பர் **மினண்டர்,** (292 கி. மு.) மிக்வும் அரிய காதல் நாடகங்கள் புனைந்தார். நாடகம் கிரேக்கரின் நாகரிகத்தை வளர்த்தது.

## 18. ரோம் நாடகக்கலை

**ரோம்** தேசத்திலும் பாட்டும், நடனமும் **தாலிக்** (Talic) என்னும் குருமார்களால் கி. மு. 750–ல் எழுந்தன. பிறகு பொம்மலாட்டங்கள் ஏற்பட்டன. **அந்த்ரோனிகஸ்** (Livius Andronicus) என்பவர் கிரேக்க நாடகங்களைப் பார்த்து, பல சோக–சிருங்கார நாடகங்களை லத்தீன் பாஷையில் எழுதி நடித்தார். என்னியஸ் (Ennius) என்பவர் மிகவும் அரிய சோகரஸ நாடகங்களை எழுதி, நாடகக்

---

* இவர் ஸொக்ராத்தன் (Socretes) நண்பர். அதினியர், ஸிஸிலித் தீவினருடன் போர்புரிந்து வலிவிழந்து சிறையுண்டபோது, யூரிபிடிஸின் கவிதைகளில் ஏதாயினும் ஒன்று சொல்ல வல்லவர்களைப் பகைவர் விடுதலை செய்தனராம்.

கலையைத் திறமுடன் வளர்த்தார். கி. மு. 154–ல், ரோமில் முதல் முதல் ஒழுங்காக நாடகமேடையமைக்கப்பட்டது. கி. மு. 52–ல் **பாம்பே** (Pompeii) என்னும் ரோம் தலைவர், சுமார் 4000–பேர் இருந்து பார்க்கத்தக்க ஒரு பெரிய நாடகக்கூடம் அமைத்தார். லூஸியஸ் அக்கியஸ் (Lucius Accius) என்பவர் பல நாடகங்கள் எழுதினர். இவரை அருஞ்சொற் புலவர் ஸிஸிரோ (Cicero) மிகவும் போற்றி வந்தார். அறிஞரும் அமைச்சருமான **ஸெநிகா** (Seneca), எட்டு அரிய சோகரஸ நாடகங்கள் எழுதினர். **ப்ளாதுஸ்** (Plautus) என்பார் நாடகத்தில் இலக்கியச் சுவையைப் பெருக்கினர். **தெரென்ஸ** (Terence) என்பார் பல இன்ப நாடகங்களால் பொதுஜனங்களை உற்சாகப் படுத்தினர். இன்னிசைப்பாக்களால் அக்காலத்தின் கெட்ட பழக்கவழக்கங்களைக் கண்டித்து, **லூசிலியஸ்** (Lucilius) என்பார், துணிந்த சீர்திருத்த நடிகராக விளங்கினர். ரோம் குடியரசு குலைந்த பின் நாடகத்தின் பெருந்தன்மையும் குலைந்து, பொம்மலாட்டமும், சில்லறைப்பாட்டும், கேலியும், விகடமுமாகி இழிந்தது. போப் கிருகரியின் காலத்தில் மாதா கோயில்களில் கிறிஸ்தவ முனிவர் சரித்திரங்கள் நடிக்கப்பெற்றன. **தாந்தே** (Dante) **பெத்ரார்க்** (Petrarch), **போகாஸியன்** (Boccacio) போன்ற அரும் பெரும் புலவர்மணிகள் விளங்கிய 14-வது நூற்றுண்டிலேயே கலைத்திறமை ஒரு புத்துணர்வு பெற்று, மன்னர் போற்ற, அழகும், அணியும் பூத்துச் செழித்தோங்கியது. விர்ஜிலின் நன்பன் **லேதஸ் போலியன்** (Pollion), **ஆரியாஸ்தன்** (Ariosto), **தஸ்ஸோ**, (Tasso), **கோல்தனி** (Goldani—இவர் 150-இன்ப நாடகங்கள் புனைந்தார்) முதலிய அருங்கலைவாணர் நாடகத்திருவிற்கு இன்னணி சூட்டி, ரோம் தேசப் புகழை ஐரோப்பாவெங்கும் பரப்

பினர். **எநீது** (Eneide) பாடிய லத்தீன் கவியரசான **விர்ஜில்** (Virgile), நாடகங்களை உற்சாகங்கொண்டு ஆதரித்து வந்தார். இக்காலத்தில் எழுதப்பெற்ற **அதாம்ஸ்** (Adams) என்ற நாடகமே, மில்தனின் **"இழந்தவின்"** (Paradise Lost) என்னும் காவியமணியை ஊக்கியது. இன்றும் இத்தலி தேசம், நாடகக் கலையிற் சிறந்தோங்கி நாகரிகத்தை வளர்க்கிறது.

## 19. பிரெஞ்சுக்கலைவளம்.

பிரான்ஸிலும் 1548-வரையில், மத சம்பந்தமான நாடகங்களே மன்னர் போற்ற விளங்கின. ழோதெல் (Jodelle 1532-73) என்பவர், முதன் முதலாக முறையான நாடகமேடை யமைத்து, ஆறு சிறந்த புலவர்களுடன் தனது நாடகங்களை நடத்தத் தொடங்கினர். க்ளெயொபாத்ரை (cleopatre) என்னும் சோக நாடகத்தை இவர் ஹென்ரி II-ன் முன் நடித்துக்காட்டினர். 4-வது லூயி காலத்தில் சிறுகதைப் பாட்டுகளுடன் நாட்டியம் மேலோங்கியது; பெரிய பிரபுக்களும் அதிற் கலந்துகொண்டனர். 1734-ல், நாட்டியம் வலுத்து, சதுராடுவோர் செல்வங் குவித்தனர். **அலெக்ஜாந்தர் ஹார்டி** என்னும் நடிகர் (1570—1631) பல சில்லறை நாடகங்களை எழுதி நடத்தினர். 1624-ல் **கார்தினல் ரிஷெலோ** (Cardinal Richelieu) வின் அதிகாரத்தில், பல நாடகப் புலவர் ஆதரவு பெற்றனர். மன்னர் தமது அரண்மனையிலேயே மேடை யமைத்து நடிகரைப் போற்றினர். ரோத்ருவா என்ற புலவர் பல சோக, சிருங்கார நாடகங்களை எழுதினர். **கோர்நெல்** (Corneille), **ரஸீன்** (Racine) என்ற பெரும் புலவர்கள், மன்னர் ஆதரவைப் பெற்று அரிய நாடகங்களை எழுதி

நடித்தனர். கொர்நெல் ஒரு பெரிய வழக்காளர் மைந்தர். சில காலம் சட்டத்தொழில் புரிந்து, அதைவிடுத்து மேடையேறினர். இவரது வீர, சோகரச நாடகங்கள் நெஞ்சை உருக்கும். கொர்நெல் எழுதிய ஹொரேஷியோ, ஸிட் (Cid) என்னும் இருநாடகங்களும் புகழ்பெற்றவை. ரஸீன் எழுதிய அத்தாலி, **பேத்ரு** (Phedre), இஃபிஜெனி, ஆந்த்ரோமாக் ஆகிய நான்கு நாடகங்களும், ஷேக்ஸ்பியர் காளிதாஸன் வாக்குகள்போலிருக்கும். ரஸீனை பிரெஞ்சு ஷேக்ஸ்பியர் என்பர். அனைவரிலும் தலைசிறந்தவர் **மோலியர்** (Moliere) (1622-1693). தமது ஒப்பற்ற சொல்வன்மையாலும், கவிச்சித்திரத்தாலும் நடிப்புத் திறனாலும், ஹாஸ்யக் கதைகளாலும், இன்ப நாடகங்கள் பல நடத்தி, அக்காலத்தில் அரசியலும், சமயமும், வைத்தியர்களும், சமுதாயமும், அடைந்திருந்த சீர்கேட்டை வெளிப்படக் காட்டத் துணிந்த இவர் நாடகங்கள் வெகு ரம்மியமாக இருக்கும். இவர் புலமை தனிப் புலமை. இவர் ஹாஸ்யங்கள் எதிரியை உடனே தலை குனிய வைக்கும். இவர் நாடகங்களில் Le Misanthrope, Tartuffe, L'Avare போன்ற நாடகங்கள் மிகவும் கொண்டாடப் பட்டவை. இவர் நாடகம் போலி சமயாச்சாரியர்களுக்குச் சவுக்கடி கொடுத்து, அவர்கள் பகையையும், பல பிரபுக்களின் எதிர்ப்பையும் அடைந்தது. அரசன் **லூயி** XIV இவரை அந்தரங்கமாக விரும்பி ஆதரித்தது போற்றத்தக்கது. மற்றொரு திறமைசான்ற பிரெஞ்சுப்புலவர் **வால்தேர்** (Voltaire). இவர் பல சோக நாடகங்கள், இலக்கணப்படி எழுதிப் பொதுஜனங்களிடையே பெரிய மாறுதல்களை உண்டாக்கினர். பிரெஞ்சுப் புரட்சிக்குப் பிறகு, நாடகக்கலையில் சில ஆபாசங்கள் புகுந்தன; இக்காலத்தில் **தால்மா** (Talma) என்பவர் நெப்போலியனுல் பெரிதும் நேசிக்கப்பட்டுச் சிறந்த

நடிகராக விளங்கினர். பிறகு சிறந்த நாவலரும் வீரக் கவியரசருமான **விக்தர் ஷ்யூகோ** விளங்கினர். இவர் தந்தை தளகர்த்தர். விக்தர் ஹ்யூகோ தனது ஏழாவது வயதில் நெப்போலியனைக் கண்டார். இவர் பிறவிக் கவி; இவர் கவிகள் வீரமலர்களாகும்; கதைகள் நெஞ்சை உருக்கும்; நாடகங்களும் அவ்வாறே. **லே மிஸரபிள்ஸ், ஹெர்நாநி, க்ராம்வெல், இளிச்சவாயன்** என்பன ஒப்பற்ற ஹ்யூகோ இலக்கியங்கள். ஹ்யூகோ பிரெஞ்சுக்கலைக்கழகத்தில் அங்கம் வகித்து, 1848-ம் ஆண்டுப் புரட்சிக்குப்பின் சட்டசபையில் சுதந்திர முழக்கம் செய்தார். நாட்டின் கல்வி, இலக்கியம், சுதந்திரம், ஏழைகளின் முன்னேற்றம் இவற்றிற்கு அருந்தொண்டாற்றி, 1885ல், 83வது வயதில் பொய்யுடலை நீத்து இப்புலவர் புகழுடம்பில் வாழுகிறார். இக்காலம் மற்றொரு சிறந்த நாவலரும் நாடகாசிரியருமான **தூமா** (Alexandre Dumas 1803-1870) சிறந்து விளங்கினர். Monte Cristo, அவர் எழுதிய சிறந்த நூல். இன்றும் ரோமன் ரோலந்து போன்ற சிறந்த நாவலரும், பாவலரும், நாடகப்புலவர்களும் பிரெஞ்சுக் கலையை வளர்த்து வருகின்றனர்.

## 20. ஸ்பெயின்

வீரனும் நாவலனுமான ஸெர்வெந்து (Cerventes) பல நாடகங்கள் எழுதிய புலவர். Lope de Vega (லோப் தி வேகன்,) Colderan (கால்டெரன்) முதலிய அரும்புலவர்மணிகள் ஸ்பெயினில் கலை வளர்த்தனர். போர்த்துகல் நாட்டிலும் **அல்பான்ஸோ** மன்னர், தாமே கவியாக விளங்கிக் கலைகளைப் போற்றினர். **கமோன்** (Camoens 1525-80) போர்த்துகல் கவியரசர். இவர்

வாஸ்கோடிகாமாவைப் பற்றி ஒரு மஹா காவியம் இயற்றி இசைபெற்ருர்.

## 21. ஜெர்மனி

ஜெர்மனியில் பத்தாவது நூற்ருண்டு மட்டும் சமய கீதங்களே பாடப்பெற்றன. பிறகு Hrotsvitha (ஹரோத்ஸ்விதை) என்னும் துறவினி முனிவர் சரிதைகளை நாடகமாக எழுதினள். **மார்த்தின் லூதர்** தனது புதிய வுணர்ச்சியை நாடகத்தின் மூலம் பரவச் செய்தார். பதினெட்டாவது நூற்ருண்டிலேதான் ஜெர்மன் நாடகக் கலை அமோகமாக வளர்ந்தது. **இரண்டாவது யோசேப்** மன்னர் நாடகத்தைப் பெரிதும் ஆதரித்தார். Schlegal, Schiller, Goethe (ஸ்லெகல், ஷில்லர், கெதே) போன்ற பெரும் புலவர்மணிகள் இக்காலம் விளங்கினர். ஷில்லரின் சரித்திர நாடகங்கள் மிக மிக அருமையானவை. Maid of Orleans, William Tell, Wallenstein போன்றவை அவர் எழுதிய ஒப்பற்ற நாடகங்கள். **கெதே** கவியரசு; அவர் எழுதிய ஃபாஸ்ட் (Faust) உலகிற் சிறந்த நாடக மணிகளில் ஒன்று.

## 23. ரஷ்யா, டென்மார்க்கு

ரஷ்யா தேசத்தில் நாடகமேடை பொதுஜனக் கல்வி மன்றமாக விளங்கி, அரிய அறிவையும், வீர வுணர்ச்சியையும், சமரஸத்தையும் புகட்டி சமூக சீர்திருத்தம் செய்து வருகிறது. **தோல்ஸ்தாய், லெனின், மார்க்ஸ்,** முதலிய பெரியோர்களின் உபதேசங்கள், ரஷிய நாடகமேடையில் உருக்கொண்டு விளையாடுகின்றன. 1756-ல் முதல் நாடக மேடை **ஸெண்டு பீடர்ஸ்பர்க்கில்** ஏற்பட்டது. **விஸின், புஷ்**

**கின்** முதலிய சிறந்த புலவர்கள் ருஷிய மேடையை அலங்கரித்தனர். டென்மார்க்கில் **ஹோல்பர்க் (1684-1754),** என்னும் புலவர்மணியின் நாடகங்கள் இசை பெற்றன. டேனிஷ்காரருக்கு மொழிப்பற்று மிகுதி. அவர் பாட்டு, நாடகங்கள் இவற்றைத் தங்கள் மொழியிலேயே ஆக்க ஊக்கங்கொண்டு, கலை வளர்த்தனர். **ஹாலண்டில் ஒந்தெல்** (Vondel) எனும் புலவர் நாடகக்கலை வளர்த்தார்.

## 23. இங்கிலாந்து

இங்கிலாந்தின் புகழ்முடியை விளக்க உலகத்தையே நாடகமேடையிற் கொணர்ந்த புலவர் சிங்கமான **ஷேக்ஸ்பியரே** போதும். கி. மு. 55. முதல் இங்கிலாந்து கலை வளர்த்து வந்தது. பேச்சுக்கினியது பிரெஞ்சு; கவிதைக்கினியது ஆங்கிலம் என்பர். 1066-1216 மட்டும் தெருக்கூத்துகள் நடந்து வந்தன. பிறகு மத சம்பந்தமான **அதிசய கேளிக்கை**களை (Miracles and Mysteries) மத போதகர் ஏற்படுத்தினர். **8-வது ஹென்றி** நாடகத்திற்குப் பேராதரவீந்தார். அவர் காலத்திற் பல நாடக மன்றங்கள் எழுந்து புலவர்களை ஊக்கின. **டியூடர்** மன்னர் காலத்தில் பல புலவர்கள் நாடகக்கலையை வளர்த்தனர். **க்ரீன் (Greene) மார்லோ, பீல், ஜான் ஹேவுட், தாமஸ் ஹேவுட்** முதலிய அரிய புலவர்மணிகளுக்குப் பின் நாடக வாணியே ஆணுருவெடுத்தாற்போல **ஷேக்ஸ்பியர்** தோன்றினார். **ஷேக்ஸ்பியர்** நாடகங்கள் படிக்கப் படிக்கத் தேவிட்டாதன. **கிங் லியர், ஹாம்லட், மாக்பெத், ஒதெல்லோ, ரோமியோ—ஜூலியத்** இவை அவர் நாடகங்களில் தலைசிறந்தவை. சரித்திர நாடகங்களில் பீமோந்து, ஃப்ளெட்சர் இருவரும் சிறந்து விளங்கினும், ஷேக்ஸ்பியரின் **கிங் ஜான்,**

ஷென்ரி VI, ரிச்சார்ட் III இவற்றிற்கு இணையில்லை. சிருங்கார நாடகத்தில் பென்ஜான்ஸன் பெயர் பெற்றிருப் பினும், ஷேக்ஸ்பியரின் As You Like It, Mid Summer Night's Dream, Tempest, இம் மூன்றும் ஒப்பற்ற இன்ப நாடகங்களாக விளங்குகின்றன. வேறு பாஷைகளில் ஷேக்ஸ்பியர் நாடகங்களை மொழிபெயர்த்தால் சுவை போய் விடுகிறது. பென்ஜான்ஸன் எழுதிய Every Man In His Humour, Volpone The Silent Woman முதலிய நாடகங்கள் மனோரஞ்ஜனமானவை. Chapman, Middleton, Nothinial Field, John Ford, James Shirley, Randolph, முதலிய பல சிறந்த நாடகாசிரியர் கள் அரிய நாடகங்களை எழுதியுள்ளனர். அருட்புலமை வாய்ந்த மில்தன், தனது தெய்வீகக் காவியமான Paradise Lost, Paradise Regained ஐத் தவிர, Arcades, Comus என்ற சிறந்த நாடகங்களை எழுதியுள்ளார். Dryden, Thomas Otway, இருவரும் அரிய நாடகாசிரியராவர். 1741-ல் காரிக் என்னும் பெரும்புலவர் நடிப்புக் கலையில் இசைபெற்றிருந்தார். இவரை ஜான்ஸன் மிகவும் மெச்சி வந்தார். ஷெரிடன் மற்றொரு சிறந்த நாடகாசிரியர். அவர் எழுதிய Rivals சிறந்த நாடகம். அடிஸன், டெனிஸன் இவர்களும் நாடகம் எழுதியுள்ளனர். இன்னும் எத்தனையோ அரிய நாடகப்புலவர்கள் ஆங்கில மேடையை அலங்கரித் தனர். தற்போது பெர்னார்ட் ஷா சொல்லுறுதிக்கும், காட்சி நயத்திற்கும், நகைச்சுவைக்கும், துணிந்துரைக்கும், மிகச் சிறந்து விளங்குகின்றார். இவர் எழுதிய Joan of Arc, ஒப்பற்ற நாடகம். இவ்வாறு ஆங்கில வுலகில் நாடக மடந்தை இசைமுடி தரித்து, இன்பச் சிங்காதனம் வகித்து விளங்குகின்றாள்.

## 24. சைனு, ஜப்பான்

**சைனுவில்** ஊருக்கு ஊர் நாடக மன்றங்கள் உள்ளன. சீனர் நாடகத்தில் மிகவும் உற்சாகங் காட்டுகின்றனர். விசேஷ நாட்களிலெல்லாம் நாடகம் நடிப்பதை ஒரு இன்ப மாகக் கொண்டாடுகின்றனர். சீனு கலையழகுச் செல்வி. **ஜப்பானில்** 1624-ம் ஆண்டு நாடக மன்றம் ஒழுங்காக அமைக்கப்பெற்றது. அதற்கு முன்பே அரிய நாடகாசிரி யர் இருந்தனர். **காதா காவஸ்து** (Kada Kawastu) என்பவரும், **இஸ்நேஜான்ஜி** எனும் மாதும் பல அரிய நாட கங்கள் புனைந்துள்ளனர். ஜப்பானியர் சங்கீதம், நாட்டி யம் நாடகக்கலை இவற்றை மிகவும் நன்கு மதிக்கின்றனர். அங்கே தற்போது நாடகம் அறிவு வளர்ச்சிக்குப் பெரும் பயனுகிறது. மேனுட்டுக் கலைகளை யெல்லாம் உரமாகக் கொண்டு, ஜப்பானியக் கலை தனிப்பெருமையுடன் பூத்துக் கனித்துச் சுவை பொழிந்து வருகிறது.

## 25. பாரதக்கலை

இவ்வாறு உலகெங்கும், நாடுதோறும் நாடகக் கலையை வளர்க்கின்றனர். இவற்றிற்கெல்லாம் மேலோங்கி, கல்வி, ஞானம், கலை, அணி, அழகு, அருள், கடவுளன்பு, ஆத்மானுபூதிச் செல்வம், கவிவளம், இவை மல்கிய நமது பாரததேசம் இன்றும் நாடகக் கலையிற் பின்னடையவில்லை. சகுந்தலம், உத்தரராம சரித்திரம், மிருச்சகடி, விக்ரமோர் வசியம், ரத்னுவளி, நாகானந்தம், மாலதி மாதவம், வேணீ ஸம்ஹாரம், ப்ரஸன்ன ராகவம், முத்ராராக்ஷஸம், ப்ரபோத சந்த்ரோதயம் முதலிய பழஞ் செல்வ நிதிகள் நமக் குள்ளன. முருகன் மொழிந்த முத்தமிழிலும் பெருநாரை, பெருங்குருகு, நாரதரின் பஞ்ச பாரதீயம், சாரகுமாரரின்

இசை நுணுக்கம் முதலிய அரிய இசை நூல்களும், முறுவல், சயந்தம், குணநூல், கூத்த நூல், செயிற்றியம், மதிவாணர் நாடகத்தமிழ் முதலிய பல கூத்தநூல்களும் இருந்தன; காலக் கரையானுக்கு இரையாகி மறைந்தன. நாடகத் தமிழ் இப்போதுதான் துளிர்விட்டுக்கொண்டிருக்கிறது. அதில் இனி நறுமண மலர்கள் குலுங்கும்; இசை வண்டுகள் முரலும்; குயில்கள் அகவும், மயில்கள் நடமாடும். இன்று வங்காளம் நாடகக்கலையை மிகவும் உன்னதிக்குக் கொண்டுவந்துள்ளது. **கிரீஷ் சந்த்ர கோஷ்** சுமார் அறுபது நாடகங்களுக்கு ஆசிரியராய் "வங்காளத்து ஷேக்ஸ்பியர், காரிக்" என்று பெயர் பெற்று விளங்கினர். துவிஜேந்திர ராய் அரிய வீரநாடகங்கள் எழுதிச்சென்றார். அவருக்குப் பின் **தாகூர்** சிறந்து விளங்குகிறார். ஹிந்தியிலும் சிறந்த நாடகங்கள் எழுதப்பட்டுத் திறமையுடன் நடைபெறுகின்றன. கன்னட நாடகங்களுக்கு மைசூர் மன்னரே பேராதரவு தருகிறார். ஆந்திரரும் நாடகக் கலையைக் கண்ணெனக் காக்கின்றனர். மஹராஷ்ட்ரம் சரித்திர நாடகங்களுக்குப் பெயர்பெற்று விளங்குகிறது.

தமிழ் உறங்குவதா? காலதேவி பல நாடுகளிலும் குவித்து வைத்துள்ள அருங்கலைச் செல்வத்தை நுகர்ந்து தானும் பழம் புதுச்செல்வியாக விளங்கவேண்டும். தமிழ்ச் செய்யுள் மிகவும் அரியது—ஆயிரம் வகையான இன்பந் தரத் தக்கது. அணியும், அழகும், இன்பமும் சொற்றிறனும், பண்ணும், பண்புங், காட்சியும், கதைச் சிறப்பும், ஆன்மவுன்னதியும், அன்புப்பெருக்கும் நிறைந்த பல நாடகங்கள் வெளிவரவேண்டும். உலகின்முன் தமிழ் தலை நிமிர்ந்து நிற்றல் வேண்டும். நாடகம் கடவுட்கலையாக விளங்கவேண்டும். இக்காலம், நம்முன் பல நாடகங்

களை எழுதியும் நடித்தும், அரிய கலைப்பணி புரியும் புலவர் சம்பந்த முதலியாரவர்களுக்குத் தமிழர் நன்றி செலுத்த வேண்டும். ஷேக்ஸ்பியர், காளிதாஸன், ரஸீன். போன்ற புலவர் நடையில், காலத்திற்கேற்ற பயனளிக்கும் தூய தமிழ் நாடகங்கள் பல வெளிவரவேண்டும். உலகியல்பு, நாட்டு நிலைமை, சமுதாய சீர்திருத்தம், வீரர் வரலாறு, சன்மார்க்கப் பெரியார் பெருமை இவற்றைப் பொருளாகக் கொண்டு பல நாடகங்கள் உலாவுக !

## 26. தமிழ்க்கலை

கடல், காற்று, மழை, வான், புவி எங்கும் இசை நிறைந்துள்ளது ; உயிர் விரும்பும் பொருள் இன்பம். இசை இன்ப வெள்ளம் ; அது தன்னை யறியாத ஒரு களிப்புக் கடலில் நம்மைக் குளிப்பாட்டும். தனித்திருக்கும்போதும், தோழருடன் ஆடும்போதும், இசை நம்மையறியாது வெளி வருகிறது. இசை உயிர் நிறைவு, உயிரின்பம், உயிரியல்பு! இசையற்ற வாழ்வு வசை. இசை உலகளாவியது ; அது எம்மொழியும் தன்மொழியானது, எம்மதமுந் தன்மதமானது; எம்மனத்தையும் தன்மயமாக்கவல்லது. இசையின் ஆற்றல் அளவற்றது. மனித வாழ்வு அழகும், அணியும், இன்பமும், அன்பும், நிறைந்த செல்வச் சித்திரமாவதற்கு முதலில் வேண்டற்பாலது இசை. இசையினின்று காவியம் வளரும் ; ஓவியம் வளரும் ; இராமாயண பாரத பாகவதப் பாட்டுகளினின்று எத்தனையோ ஓவியக் கலைகளும் சிற்பங்களும் பெருகி யோங்குகின்றன ! சித்திரம், நாடகம், நடனம் இவை இசையின் சேய்கள். இறைவன் எங்கு மிருப்பது போல இசையும் எங்குமுள்ளது. அது நாத ப்ரம்மம். இசை வளர்ச்சி, என்றும் எல்லா மக்களுக்கும் பொதுவாகும். ஒரு குயில் அகவுகிறது ; அதன் இன்

பத்தை சாதிசமய வேற்றுமையின்றி அனைவரும் நுகரு கிறோம். அதுபோல இசையும் அனைவர்க்கும் பொதுவே யாகும். அது ஒரு மொழியின் குத்தகையல்ல. இசை யென்பது உயிருக்குயிரான இன்பத்தினின்றும் பொங்கி யெழும் நாதவூற்றாகும். குயில், கிளி, மைனா, வானம்பாடி, காக்கை முதலிய பறவைகள் தத்தமக்கிசைந்தவாறு பாடிக் களிப்பதுபோல, உலகில் பல மொழியினரும் தத்தமது மொழிவளமைக் கேற்றவாறு இசையமைத்துக் கொள்கின் றனர். அவரவ ரிசை கேட்டு அவரவர் களி கூத்தாடுகின் றனர்.

நமது தமிழ்ச் சமுதாயம் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகம் பொருந்தி, செல்வக் கலையணிந்து சீரோங்கி விளங்கியது. தமிழ்மகள் புலவர் நாவிலும், மன் னர் மன்றிலும், மக்கள் அன்பிலும், அருட்பெருமையுடன் விளங்கினாள். தமிழர் உலகின் தொல்மரபினர்; தமிழ் தொன்மொழி. தமிழ்மொழி ஆயிரங்கலைச் செல்வமணிந்து நிலவிய திருமொழி; தமிழ்த்தாய், கடவுள் மணமும், கட வுட் பொலிவும், கடவுளன்பும், கடவுள் வீறும், கடவுட் செல்வமும் ஓங்கிய மொழியரசு. தமிழர் சிற்பத் தேர்ச்சி, ஒவ்வொரு ஆலயத்துள்ளும் பேசுகிறது. தமிழரின் கவிப் புலமை சிலப்பதிகாரம், குறள், கம்பன், சிந்தாமணி, பெரிய புராணம் இவற்றின் உள்ளத்தினின்று இன்ப வெள்ளமா கப் பாய்கிறது. தமிழரின் இசை வளமோ தேவார திரு வாசகங்களிலும், ஆழ்வாராதிகளின் பாசுரங்களிலும் என் பும் உருக அன்புக் கனலாகப் பரவி உள்ளத்தை அள்ளு கிறது. நமது கடவுட்புலவர் தமது ஆர்வத்தை இசை பெரு கும் இன்பத் தமிழ் வெள்ளமாகப் பாய்ச்சினர்! சிலப்பதி காரம் அரங்கேற்றுகாதையில் தமிழிசையும், அரங்காட

னும், கூத்தும் அக்காலத்திற் பெற்றிருந்த செழுமை நன்குப் புலனாகும். **சிலம்புச் செல்வத்தை** ஓதி யுணர்க.

மொழிமூவகைத்து : (1) இசைமொழி (சங்கீதம்) (2) நடிப்பு மொழி (கூத்து, நாடகம்,) (3) இயல்மொழி (இலக்கியம்). இயலுடலும், இசை நாடக இறக்கைகளும் கொண்டு, கடவுள் வானிற் பறக்கும் கருடன் போன்றது தமிழ்க்கலை. இயற்றமிழ் நூல்கள் இன்று சில எஞ்சியுள்ளன; நாடக நூல்களும் அவ்வாறே. தமிழ் மிகப் பழந் திருமொழி. அதன் மிக மிக அரிய பெரிய கலைவளத்தைக் கடலனார் விழுங்கி இன்னும் ஏப்பம் விடுகிறார். தமிழர் தமிழ்க்கடலைக் கடைந்து, புதிய புதிய இன்பக் கலைகளைக் காணவேண்டுமென்பதே ஆண்டவன் திருவுளம் போலும்! இனிப் பழமை பேசிப் பயனில்லை. பழமையால் ஒரு ஊக்கம் பிறக்கக்கூடும். ஆனால் புதிய கலை வளர்ச்சியில் முனைந்தாலேதான் தமிழை உண்மையாக முன்னேற்ற முடியும்.

தமிழில் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, தாயுமானவர், திருப்புகழ், இராமாயண கீர்த்தனங்கள், அருள் வள்ளலார் பாடல்கள், தற்காலப் புலவர் பாடல்கள் முதலிய பல இலக்கியச் செல்வங்கள் உள்ளன. தமிழ்ச் செல்வம் மேன்மேலும் பெருகவேண்டும். தமிழ் வற்றாப் பாலாறு. அவ்வாற்றைப் புதுக்கலை வளரப் பாய்ச்சுவோம். தமிழ் மொழியின் பழம் பெருமை மற்றெம் மொழியினும் பெரிதெனினும், தற்போது தமிழ் படும் சிறுமையும் மற்றெம்மொழியினும் பெரிதாகவே யிருக்கிறது. இரு நிதிச் செல்வத்தை வைத்துக்கொண்டு, நம்மை எற்றி மிதிப்போன் வாயலில் ஐயம் புகுவது போன்றது, தமிழர் தமிழைப் புறக்கணித்து, பிறமொழிகளில் மோகங்கொண்டிருத்தல்.

தமிழை இன்னும் ஆயிரம் வகையாக வளர்த்து, உலகம் தமிழருமையை வணங்கச் செய்தல்வேண்டும். பல மொழி களின் நயங்களையும், சீர்களையும் தமிழுக்கு உரிமையாக்கித் தனித்தமிழ்ச் செல்வத்தைப் பெருக்கவேண்டும். அதற் கேற்ற கடவுட் புலமையாளரும், அருட்கவிகளும் இன்றும் நம்மெதிரே யுள்ளனர். ஆனால் அவர்களை அறிந்து போற்று வாரிலர்.

"வானுறு மதியை யடைந்துன் வதனம்;
வையக மடைந்ததுன் கீர்த்தி;
கானுறு புலியை யடைந்துன் வீரம்;
கற்பக மடைந்த நின் கரங்கள்;
தேனுறு மலராள் அரியிடஞ் சேர்ந்தாள்;
செந்தழல் புகுந்ததுன் மேனி;
யானுமென் கவியும் எவ்விடம் புகுவோம்
எந்தையே நந்திநா யகனே!"

என்னும் கதிக்கு இன்று தமிழ் வந்துகொண்டிருக் கிறது. நாளை எப்படியாமோ! ஆதலின் "தமிழ் தமிழ்" என்று அல்லும் பகலும் உயிர்த்தல் ஒவ்வொரு தமிழன் கடமையுமாகும். வங்கச்செல்வி சிங்காரக் கவி வீணையால் மனிதரை மோகப்படுத்துகிருள். ஹிந்தி இந்தியாவையே வெல்லப்போகிறது; நமக்கடுத்தாற்போலுள்ள ஆந்திரம் வீரவிழிப்புற்றுக் கலையும், கவியும், புதுமையும் பெற்று விளங்குகிறது; மராத்தி பாஷையும் கணக்கற்ற கவிவளம் பொருந்தியுள்ளது. குஜராத்தியும் ஹிந்தியைப் போலவே சீரோங்கி வருகிறது; அனைத்திலும் மேனாட்டு வேகம் பரவி வருகிறது.

தமிழ் என்ன செய்கிறது? பழமை பேசிப் புது மையை வெல்ல முடியுமா? அக்பர் சாம்ராஜ்யமாண்

டால் ஷா ஆலத்திற்கு என்ன? "ராமர் இலங்கையிலிருந்து விமானத்திற் போகவில்லையா! இப்போதுள்ள ஆகாய விமானம் என்ன அதிசயம்?" என்று சொல்லும் பேதமை வேண்டா! ராமரின் வீர இந்தியா இன்று எப்படி இருக்கிறது? முன் சிறப்புகள் பல இருக்கலாம். அவற்றையே பேசிப் பயனில்லை; இன்று தமிழ் சிறுமையுற்றுள்ளது. தமிழைப் பெருமைப்படுத்த வாருங்கள்! தமிழனுக்குக் கதி, தமிழே, தமிழகமேயாம். இரண்டையும் கருத்தூன்றிச் செழிப்புறுத்தவேண்டும். எழுக தமிழர்! கவி, கலை, இசை, நாடகம், சிற்பம், சித்திரம், அறிவு, தொழில், நாகரிகம், அரசியல், சமுதாய வாழ்வு அனைத்திலும் தமிழர் சிறப்புற வேண்டும். புதுயுகக் குயில்கள் வருக! வசந்தம் மலர்ந்தது!

இளந்தமிழ் வாழ்க !
எந்தாய் வாழ்கவே !!

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 20 | 22 | திறைகளும் | திரைகளும் |
| 26 | 11 | ஜனங்கலே | ஜனங்களே |
| 33 | 14 | கனித்து | கனிந்து |

